[26th September 1961

SRI M. D. THIAGARAJA PILLAI : இப்பொழுது தெரிவிக்கப்பட்ட குறைகளை நீக்க, கூட்டுறவு ஸ்தாபனங்களுக்கு விற்பனை செய்ய அனுமதி கொடுத்தால், நலமாக இருக்கும். அவ்வாறு செய்ய ஏற்பாடு செய்வார் களா ?

THE HON. SRI P. KAKKAN : கூட்டுறவு ஸ்தாபனங்களுக்குக் கொடுப்பது பற்றிய தகவல் இப்பொழுது என்னிடம் இல்லை. தனிக் கேள்வி போட்டால் பதில் அளிக்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : கலப்படத்தைத் தடுப்பதில் வெற்றி காண வேண்டுமானால், வினியோக முறையை மாற்ற வேண்டும். வினி யோகஸ்தர்களை நியமிப்பதில், சிமெண்ட் கம்பெனிக்காரர்களையே நியமித் தால், தொடர்ந்து இம்மாதிரியேதான் நடக்கும். ஆகவே, அரசாங்கம், கூட்டுறவு ஸ்தாபனங்களை வினியோகஸ்தர்களாக அங்கீகரிக்க நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI P. KAKKAN : தனிக் கேள்வி போடவேண்டும்.

SRI S. M. ANNAMALAI : சிமெண்ட்டில் கலப்படம் செய்வதற்குப் பதிலாக, சிமெண்ட் மூட்டையை தூக்கிப்போடும்போது இரண்டு படி செமன்ட் கீழே கிடைக்கிறது. அதை அவர்களே உபயோகிக்கிறார்கள். ஆகவே, மூட்டையில் சிமெண்ட் அளவில் குறையாமல் இருக்க சர்க்கார் நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI P. KAKKAN : அளவு குறையக் கூடாது என்பதுதான் சர்க்காரின் எண்ணமும். அப்படிக் கீழே மூட்டைகள் விழும்போது சிமெண்ட் குறைந்தால், அதில் நாம் ஒன்றும் செய்வதற்கில்லை.

SRI V. SUBBIAH : சிமெண்டு ஒரு மூட்டை, இரண்டு மூட்டை வேண்டுமென்பவர்கள் இன்றைக்கு ரூ. 14 வீதம் கொடுத்துக் கள்ள மார்க்கெட்டில்வாங்க வேண்டியிருக்கிறது. இந்த நிலையைப் போக்க, தாசில்தார்கள் லைசென்சுகளை வழங்குவதற்குப் பதிலாக, கிராமப் பஞ் சாயத்துக்களில், கிராமத்திற்கு வேண்டிய சிமெண்டுகளை அளிக்க . . .

DEPUTY SPEAKER : The hon. Member may put a separate question.

*Tax on railway passenger fares (merger with railway fares)*

*1842 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

ரயில்வே டிக்கட் கட்டணத்துடன் பிரயாணவரி இணைப்பு செய்ததால் நம் மாநிலத்தின் வருவாய் குறையுமென்று மத்திய சர்க்காருக்கு மாநில சர்க்கார் ஆட்சேபணை தெரிவித்துள்ளார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

SRI S. M. ANNAMALAI : இந்த டிக்கட் கட்டணத்துடன் பிர யாண வரியைச் சேர்ப்பது பற்றி, மத்திய சர்க்கார் மாநில சர்க்காரை ஆலோசனை கேட்டார்களா ? அது விஷயமாக மாநில சர்க்கார் பரிசீலனை செய்தார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இல்லை, இந்த சர்க்காரை கலந்தாலோசிக்கவில்லை.

*Flood Relief Fund*

* 1843 *Q.*—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Finance be pleased to state the total amount which has been donated so far to Sri Kamaraj Flood Relief Fund?